# உப்பு வயல்

முருங்கைப் பூ உதிர்த்த காலத்தில் பலரோடும் கள்ள உறவு கொண்டிருந்ததாக திருடனின் மனைவி செம்பா ஊரைவிட்டு விலக்கி வைக்கப்பட்டாள். அவளோடு ரகசியக் காதல் கொண்டிருந்த பாதிரியின் மகனும் பிறவி ஊமையுமாகிய தானியேல் பாடசாலையின் பின்புறமிருந்த திலாக் கிணற்றின் உயரத்தில் நிலா பௌர்ணித்த இரவில் உயிரைப் போக்கிக் கொண்டு தொங்கிய மறு தினம் இது நடந்தேறியது.

திருடனின் மனைவி என்றபோதும் செம்பா பயந்த சுபாவமுடைய வளாகவும், சிறு பெண்ணாகவுமே இருந்தாள். எப்போதும் நீலநிற உடைகளை விரும்பி அணிந்து வந்த அவள் ஊரைவிட்டு விலக்கி வைக்கப்பட்டபோது முப்பதாவது வயதை அடைய ஆறு நாள்கள் மீதமிருந்தன. கறுத்துச் சுருண்ட கூந்தலும், குள்ளமான ரூபமும் கொண்ட அவளுக்கு இடது கன்னத்தில் சிறிய மரு ஒன்று இருந்தது வசீகரமாக இருந்தது. ஊரில் அயலாருடன் பழகி அறியாத செம்பா பகல் வேளைகளில் கடற்கரையில் உலரும் சிப்பிகளையும், இறந்த நண்டுகளையும், ஆமை ஓடுகளையும் பொறுக்கி வந்து கடல்கிராமத்துக்கு வரும் உப்பு வியாபாரி களிடம் விற்றுக்கொண்டிருந்தாள்.

அவளுக்குத் திருமணமாகி ஆறு வருடங்கள் கடந்திருந்தன. பனைவிடலிகள் நிரம்பிய ஊரில், விரசக் கனவுகள் பெருகும் பூப்பெய்திய வருடங்கள் கழிய இருந்தவளைக் கட்டிக்கொண்டு இங்கே கூட்டி வந்தான் சொர்ணராசு. இருவரும் நாணல் பூத்த வயல் வழியே நடந்து ஊரைப் பிரிந்து வரும்போது ஆணின் இச்சை அவளுக்குள் சுரந்துகொண்டிருந்தது.

ஆனால் இந்த ஆறு வருடங்களில் அவன் முதல் முத்தத்தைக் கூட அவளுக்குத் தரவில்லை. காமத்தின் எலுமிச்சை நிறம் உடலேற,

சிவப்பு, மஞ்சள் பூச்சூடிய தலையுடன் தனித்து வீட்டில் இருந்து வந்தாள் செம்பா. சொர்ணராசு ஊரில் தங்குவதே இல்லை. அதுவும் கலெக்டர் துரையின் குதிரையைத் திருடி வந்துவிட்ட பின்பு எப்போதும் துப்பாக்கி வீரர்களால் தேடப்பட்டுக்கொண்டு இருந்ததால் அவன் ஒளிந்து அலைந்துகொண்டிருந்தான்.

அது ஒரு கறுப்புக் குதிரை. குடிவெறி ஏறிய கண்களுடன், உரக்கச் சிரித்தபடி அந்தக் குதிரையில் ஏறி அமர்ந்தபடி சொர்ணராசு தெருவில் ஓர் இரவெல்லாம் சுற்றிக்கொண்டிருந்தான். சிறுமிகளும், விளையாட்டுப் பையன்களும் பாதி உறக்கத்தில் விழித்து குதிரையின் அழகு கண்டனர். அந்த ஊருக்கு வந்த முதல் குதிரையே அதுதான். அதன் காதுகள் வசீகரமாக இருந்தன. செம்பா கதவைத் திறந்து படல் மீது சாய்ந்தபடி அவனைப் பார்த்தாள். குதிரையை விட்டு இறங்கி மணலில் படுத்துக் கொண்டு, கால் மேல் கால் போட்டபடி அவன் புகைத்துக் கொண்டிருந்தான். அவளுக்குக் குதிரையை ஸ்பரிசிக்கும் ஆசை எழுந்தது. அதை அறிந்துகொண்டவன் போல அவளை அருகில் கூப்பிட்டு, எதிர்பாராத நிமிடம் ஒன்றில் அவளைத் தூக்கி குதிரை மீது அமர்த்தினான். பயமும் ஆசையும் கலந்த மிரட்சியில் அவள் குதிரையின் வயிற்றைக் கால் விரல்களால் தொட, அது தலை தூக்கியது. அவளே குதித்துவிட்டாள். இரவெல்லாம் அவனுடைய சிரிப்பு, தெருவில் கேட்டபடியிருந்தது. அன்றிரவு அவன் உறங்கிய பின்பும் நெடுநேரம் குதிரை வீதியில் தனியே அலையும் சப்தத்தைக் கேட்டுக்கொண்டிருந்தாள் செம்பா.

மறுநாள் சிவப்புத் தொப்பி அணிந்த சிப்பாய்கள் குதிரையைத் தேடி ஊர் வந்தபோது, தெருவில் கிடந்த லத்திகளைக் கண்ட தடம் பார்த்துப் போயினர். சொர்ணராசு குதிரையுடன் வட்டத் திட்டில் போய் ஒளிந்துகொண்டான். என்றாலும் காவல் வீரர்கள் அவனை மடக்கிப் பிடித்து, கை கால்களில் விலங்கிட்டு நடத்தியே கூட்டிப்போனார்கள். வழியில் மாட்டுச் சந்தைத் திடலில் இருந்த கிணற்றில் இறங்கி சொர்ணராசு குடித்த தண்ணீரில் இருந்த கரும் பாசி, அவன் உடலில் சேகரமாகி, சிறையில் அடைபட்ட மூணாம் நாள் தலைமயிர், பற்கள், கால் விரல்கள் எங்கும் கரும் பாசி வளர, பச்சை நகங்களும், நடுங்கும் கறை பள்களுமாக உளறிக்கொண்டு உயிர் நீத்தான். அவனை இறந்த நாய்களின் உடலைத் தூக்கி எறியும் காவல் கிணற்றில் எவரும் அறியாது சிப்பாய்கள் தூக்கி எறிந்து போட, நீரில் ஊறி

மிதந்த நாள்களில் சூரியத் தலைவன் அவன் உதட்டில் முத்தமிட்டு நகர, மிருகங்களின் தாடி வளர்ந்து தனது உடலில் சுருண்டுகொள்ள, அலறி இரவில் எழுந்து முற்றத்தில் வந்து சொர்ணராசு வந்துவிட்டானோ எனத் தேட, உலர்ந்த மீன்களின் கண்களில் அலையிடாமல் உறைந்த கடல் மட்டுமே நீலநிறமா யிருந்தது.

சொர்ணராசுவை சிப்பாய்கள் பிடித்துப் போவதைக் கண்ட உப்பு வியாபாரிகள் செம்பாவிடம் அதைத் தெரிவித்தனர். அவள் பெருமூச்சும் வேதனையுமாக வீட்டில் அடைந்து கிடந்தாள். மனத்தில் காரணமற்ற பயங்கள் எழுந்து பெருகின. முன்னை விடவும் தனிமை எல்லா இடுக்குகளில் இருந்தும் அவளை எட்டிப் பார்த்தபடி இருந்தது.

பல ஊர்களில் இருந்தும் சொர்ணராசு திருடிவந்த மணல் கடிகாரம், கோமாளிப் பொம்மைகள், தலைக்கவசம், சூதாட்டப் பலகை, மயிலிறகு விசிறி இவற்றோடு அவளும் பயன்படாத பொருள் போல வீட்டிலிருந்தாள். அவளிடம் கிராண்ட் சர்க்கஸில் இருந்து சொர்ணராசு திருடிவந்த செங்கொண்டைக் கிளி ஒன்றிருந்தது. அது செம்பா! செம்பா! என வாய் ஓயாது கத்தி வீட்டின் தனிமையைக் கலைத்தது.

செங்கொண்டைக் கிளிக்குப் பேசக் கற்றுத் தந்தவன் செம்பாவின் கணவன்தான். மற்ற கிளிகளை விடப் பருத்தும், கழுத்தில் நீலப் பட்டை நிறம் கொண்டும், அழகிய செங்கொண்டை கொண்டது மான அக்கிளி சர்க்கஸில் ஒய்யாரமாக இருந்தது. அதைப் பிறர் அறியாது திருடி வந்தபோது இரவெல்லாம் கொச்சையான ஆங்கிலத்தில் கிளி அவனைத் திட்டியது. அவனோ அந்தக் கோபத்தின் மீது காதல் கொண்டவனாக அதைக் கொஞ்சினான். கிளியைப் பழக்குவதற்காக தினமும் அதற்கு சாராயம் ஊற்றிக் குடிக்கச் செய்தான். போதை பழகிய கிளி அவன் பேச்சைக் கேட்டுப் பயின்றது. கடற்கரையின் உயர்ந்த மணல் திட்டில் கிளியை விரலில் நடக்க விட்டபடி படுத்துக் கிடக்கும் சொர்ண ராசு மிக மோசமான கொச்சை வார்த்தைகளை அதற்கும் கற்றுத் தந்தான்.

சில நாட்களில் குடிவெறி ஏற இரவில் இருவரும் பரஸ்பரம் ஏசிக்கொள்வது காற்றேறி மிதக்கும். வீட்டைக் கடக்கும் எவரையும் கிளி வசையிட்டது. அதிலும் குறிப்பாக பாதிரியார்

சைக்கிளில் போகும்போது தான் கற்று வைத்த வசையெல்லாம் காட்டி அவரைக் கிளி ஏசுவதும் அவர் சைத்தானின் குஞ்சே! என்றபடி சைக்கிளை வேகமாக ஓட்டிப் போவதும் தினசரிக் காட்சி.

துஷ்டத்தனமாகவும் மூர்க்கத்தனமாகவும் வளர்ந்த கிளி செம்பாவிடம் மட்டும் பயந்தது. தனிமையில் நீண்ட காலம் இருந்த அவள் குரலில் எப்போதும் கசப்பு நெடி வீசியது. அவள் திறந்துவிட்டபோதும் அது அவளை விட்டுவிட்டுப் போகாமல் கூரையிலே நின்றது. மழைக்காலம் வந்தபோது கிளிக்கு பயமும் தனிமையும் அதிகமாக அது விடாது உளறத் தொடங்கியது. கடற்கரையில் பெய்யும் மழை எளிதில் நிற்பதில்லை.

விடாது பெய்யும் மழையில் வீட்டில் சப்தங்களின் விநோத இசை நிரம்பியது. பெயர் இல்லாத பூச்சிகள் கதவில் ஏறி இரவெங்கும் விடாது பாடின. கடலின் அலையோசை புரண்டுகொண்டிருந்தது. செம்பாவோ மழையின் மெல்லிய சலனத்தால் தூண்டப்பட்ட வளாக, இல்லாத ஆண் ஸ்பரிசம் தேடி மனத்திற்குள் குமைந்து கொண்டிருந்தாள். காமம் ஒரு வானவில் போல அவளது தலை முதல் கால் வரை பாய்ந்திருந்தது. மழை வெறித்த நாள்களில் வேதக் கோவிலின் பின்புறம் நீலநிறப் பூக்களும், மஞ்சள் பூக்களும் அடர்கின்றன. எப்போதாவது அந்தப் பூக்களைப் பறிக்கப் போகும் போது வேதக் கோவிலின் இடிந்த சுற்றுச் சுவரில் அமர்ந்தபடி தானியேல் நாய்க்குட்டி ஒன்றைக் கையில் வைத்துக்கொண்டு தூரத்துக் கடலை வெறித்துக் கொண்டிருப்பதைப் பார்த்திருக் கிறாள். அவனுக்குப் பாதிரியைப் போலவே முகச்சாயல் இருந்தது. ஆயினும் பாதிரி முகத்தில் உள்ளது போன்ற அம்மைத் தழும்புகள் அவன் முகத்தில் இல்லை. அவன் முகம் கூழாங் கல்லைப் போல மெருகு ஏறி இருந்தது. பாதிரி மழை வெறித்த நாள்களில் கிராம சபைகளுக்குப் பிரசங்கம் செய்ய சைக்கிளில் போவதை செம்பா பல முறை கண்டிருக்கிறாள். உயரமான அந்த மனிதரின் கண்கள் எப்போதும் சிவந்திருக்கும். காற்றில் அலையோடும் அங்கியுடன் வேதப் புத்தகங்களும், சங்கீதம் இசைக்கும் ஜால்ரா கருவி ஒன்றையும் கொண்டபடி அவர் போய்க்கொண்டிருப்பார். மழையோடு திரும்பும் அவர் கறுப்புக் குடையுடன் தெருவில் போவது அழகாக இருக்கும்.

கிறிஸ்துமஸுக்கு முந்திய நாள்களில் மழை விடாமல் பெய்யத் தொடங்கும். கடலின் சீற்றத்தில் எழும் அலைகள் வேதக்

கோயிலின் கோபுரமணி வரை எழுந்து அடிக்கும் என்பார்கள். பூட்டிய கதவுகளும் வெறித்த வீதிகளுமாக ஊரே அடங்கிவிடும். கரை மீறிய அலைகள் வீதிகளில் மீன்களையும் நண்டுகளையும் உலவச் செய்யும். கூரையில் உறங்கும் கோழிகள் அலைகளால் இழுத்துச் செல்லப்பட்டு கடல் எங்கும் ரோமங்களை உதிர்த்து மிதக்கும். அலைகளின் பேரிரைச்சல் தாங்காது கிளி பயந்து சப்தமிடும்.

சுழிக்காற்று செம்பாவின் வீட்டுக் கதவில் பாதியைப் பிய்த்து எறிந்து போனது. மழையை மறைக்க அறைக் கதவில் சேலையைக் கட்டியிருந்தாள் செம்பா. ஈரத்தில் மன்னரின் தலைக் கவசத்தில் ஒட்டிய தானியங்கள் முளைத்துக் கிளைவிட்டன. சாரல் ஓயாத நாள் ஒன்றில் நாய்க்குட்டியைத் தொலைத்த தானியேல் தெருவெங்கும் அதைத் தேடி அலைந்துகொண்டிருந்தான். அவனது சுவடுகளை அழித்துப் பெய்தது மழை. சிறு சப்தங்களைக் கூட மிக உன்னிப்பாகக் கேட்டபடி அலைந்த அவன் செம்பாவின் வீட்டின் பின்பாக நாய் கத்துவது போன்ற சப்தம் வர, உடனே சேலைக் கதவை விலக்கி அவள் வீட்டினுள் நுழைந்தான்.

அவள் படுத்துக் கிடந்த அறையில் போதிய வெளிச்சமில்லை. திரிவிளக்கு மங்கலாக எரிந்துகொண்டிருந்தது. சுவர்கள் ஈரத்தில் நீர்த் திவலையிட்டன. அவன் நாய்க்குட்டியைத் தேடுவதற்காக அறையினைச் சுற்றிப் பார்த்தான். அவனை எதிர்பார்க்காத செம்பா சட்டென எழுந்துகொண்டாள். ஒரு மூலையில் கூண்டில் தொங்கிய கிளி அவனை வசையிட்டது. அவனும் அதை ஏதோ திட்டியது போலச் சப்தமிட்டு அவளருகில் வந்தான். அவனது உடலெங்கும் தண்ணீர் சொட்டியது.

முகத்தில் மணல் அப்ப, அவன் செய்த ஜாடை மொழி அறியாது அவனையே பார்த்துக்கொண்டிருந்தாள் செம்பா. வெளியே சாரல் வலுத்துக்கொண்டிருந்தது. அவன் நாய்க்குட்டியைக் காணாது புறப்படும்போது அவளறியாமலே சொன்னாள், ''வெளியே மழை கொட்டுது... கொஞ்சம் இரேன்''. அவன் பதில் சொல்லாது உதட்டைச் சுழித்தபடி தரையில் உட்கார்ந்து கொண்டான். நெடுநாள்களாகக் கொடியில் உலர்ந்து கொண்டிருந்த சொர்ணராசுவின் வேட்டியை எடுத்துத் தலை துவட்ட அவனுக்குத் தந்தாள். அவன் தலை துவட்டாது வேஷ்டியின் வாசனையை நுகர்ந்துகொண்டிருந்தான். பிறகு அதைத்

தலையைச் சுற்றிப் போர்த்தியபடி அவளைப் பார்த்துச் சிரித்தான். அவனிடமிருந்து ஏதோ ஒரு சுகந்தம் பிறந்தபடியிருந்தது. முதல் முறையாக அவன் ஓர் ஊமை என்ற நிஜம் அவளுக்குள் தோன்றியது போல எண்ணங்கள் ஓடின. அவன் திரும்பவும் சிரித்தான். நிமிட நேர முடிவில் கட்டுப்பட்டவள் போல அவன் எதிர்பாராது அவனைக் கட்டிக்கொண்டு தனது நாவால் அவனது உதடுகளை ருசித்தாள்.

இதுவரை தானறியாத அந்த உப்பு ருசியை அவன் இரவெல்லாம் விரும்பினான். உதட்டில் ரத்தம் சீறிப்பாய, முத்தமிட்டுக் கொண்டனர். அன்றிரவு பெய்த மழையில் உறக்கம் அற்ற இருவர் தண்ணீரின் வாசனையை அறிந்தனர்.

கோழி ரோமங்களும், இறந்துபோன பூனைகளும் ஒதுங்கிய வீதியில் மறுநாளில் தானியேல் நடந்து வீட்டுக்குப் போனபோது கனவில் சுழன்றபடியிருந்தான். அன்று பகலே அவனுக்கு சுரம் கண்டது. பாதிரி அவனருகில் அமர்ந்தபடி வாசகங்களை முணுமுணுத்துக்கொண்டிருந்தார். தானியேல் உப்பள வயலில் வெள்ளை நிறப் பூக்கள் பூப்பது போலவும், தன் உடலே உப்பள வயல்வெளி போல இருப்பதாகவும் கண்டான்.

இரண்டு நாள்கள் செம்பா, தானியேல் நினைவில் இருந்து மீள முடியாமல் கலைந்த படுக்கையினை விட்டு அகலாது கிடந்தாள். பின் ஏனோ தான் மீண்டும் தானியேலை மட்டும் பார்க்கவே கூடாது என முடிவு செய்துகொண்டாள். தானியேலும் அதன் பிந்திய நாள்களில் வரக் காணவில்லை என்பதால் அவள் வேறு ஆண் சகவாசம் அறியத் தொடங்கினாள். உப்பு வியாபாரிதான் அவளது காதலை அறிந்தான். பின் மற்றவர்களும் அவளை அறிந்தனர்.

பதிமூன்று நாள்கள் சுரத்துக்குப் பிறகு உடல் தேறி எழுந்த தானியேல், எவர் சொல்லையும் கேட்காது, வீதியில் இறங்கி செம்பாவின் வீட்டின் முன்பு வந்து நின்றான். அவனைக் கண்டதும் கதவை அடைத்துக்கொண்ட செம்பா, அவன் பார்வையில் இருந்து விலகவே விரும்பினாள். அவனோ கதவைத் தள்ளிக்கொண்டு உள்ளே வர முயல, அவள் கடுமையாகப் பேசி அவனை விரட்டி அனுப்பினாள்.

செய்வதறியாது தானியேல் அவளைப் பார்த்துக்கொண்டே இருந்தான். பின்பு தினமும் அவன், வீட்டினைச் சுற்றி

அலைவதை அவளால் தடுக்க முடியவே இல்லை. அவனை முகத்துக்கு எதிராகத் திட்ட வேண்டும் என்பதற்காகவே செம்பா குடிக்கப் பழகினாள். குடித்த பின்பு அவள் ஏசும் வார்த்தைகள் கேட்டுத் தனியே அழுதபடி நின்றான் தானியேல்.

சில வாரத்துக்குள் செம்பாவின் குணமே மாறிப்போனது. அதுவும் தானியேல் எவரும் எதிர்பாராது. தனது தலையை மழித்துக்கொண்டு, விகாரரூபம் கொண்டவன் போல அவள் வீட்டினைச் சுற்றி அலைவது கண்டபின்பு வன்மம் கொண்டவள் போலக் கூச்சலிடத் தொடங்கினாள். சில நேரங்களில் அவனை அடிப்பதற்கு உடைந்த துடுப்பை எடுத்துக்கொண்டு தெருவில் ஓடுவாள்.

பாதிரியாரின் மூத்த மகள் சாரா இதற்காக தினமும் தானியேலைத் திட்டி அழுதபோதும், அவன் கட்டுப்படவில்லை. பிற ஆண்களை நேசிக்கும் செம்பா தன்னை வெறுப்பதன் காரணம் அறியாத அவன் பகல் நேரத்தில் தலையறுந்துபோன தோட்டத்துச் சிலை ஒன்றினைக் கட்டிக்கொண்டு நிர்வாண மாகப் படுத்துக் கிடப்பதையும், சில சமயம் அந்தப் பெண் சிலையை விடாது முத்தமிடுவதையும் கண்டு சாராவிடம் பெண்கள் சொல்லியபோது, அவள் கர்த்தரிடம் சாத்தானை விலக்கச் சொல்லிப் பிரார்த்தனை செய்தாள்.

தானியேல் வீட்டில் இருக்கும் பொருள்களைக் காரணம் இன்றி உடைக்கத் தொடங்கினாள். சில இரவுகளில் கண்ணாடியின் முன்பு அமர்ந்தபடி தன்னைத் தானே முத்தமிட்டுக் கொண்டிருப் பான். எப்போதாவது மனம் மாறியவன் போல மண்டியிட்டு விடாது பிரார்த்தனை செய்துகொண்டிருப்பான்.

பாதிரிக்குத் தனது மகனின் செய்கைகள் எதுவும் விளங்கும் படியில்லை. தானியேல் காக்கைகளின் சப்தம் அடங்கிய மதியம் ஒன்றில் செம்பாவின் வீட்டினுள் நுழைந்து பிடிகத்தியால் அவள் உதட்டை இரண்டாகக் கிழித்துவிட்டான் என்று தெரியவந்த அன்றே அவர் செம்பாவின் துர்நடத்தைகளை அறிந்து கொண்டார்.

உதடு துண்டிக்கப்பட்ட செம்பா வேதனையில் அவனை ஏசி, மணலை வாரித் தூற்றினாள். பிற ஆண்களோடு சகவாசம் வைத்திருக்கும் செம்பாவை ஊரை விட்டு விலக்கி வைக்க பாதிரியே முதல் குரல் எழுப்பினார். அன்றிரவு உப்பு வயல்களில்

தனியே அலைந்து திரிந்தான் தானியேல். வானத்தில் பூர்ணித்த நிலவால் உப்பளம் எங்கும் அலையோடியது. வீட்டுக்குத் திரும்பி அம்மாவின் பழம் புடைவை ஒன்றைத் திருடிக்கொண்டு பாடசாலைக்கு வந்து படுத்துக் கிடந்தான் தானியேல். இரவு மெல்ல விரிந்துகொண்டிருந்தது. தெருக்கள், வீடுகள், மரங்கள், செடி கொடிகள் எல்லாமும் வெளிர் ஒளியில் மினுங்கின. சொல்ல முடியாத அழகு நிரம்பிக்கொண்டிருந்தது.

வானத்தைப் பார்த்தபடியே கிடந்தவன், விடியும் தருவாயில் அம்மாவின் புடைவையில் சுருக்கிட்டுக்கொண்டு திலாக் கிணற்றில் தொங்கி உயிரை மாய்த்துக்கொண்டான். அடுத்த நாள் பகல் முழுவதும் செம்பா குடித்துக்கொண்டே இருந்தாள். அவளது உதடு எரிந்துகொண்டிருந்தது.

## II

கோடையில் மழையற்றுப்போய் நெருப்பை வாரியிறைத்தது போல வீசியது காற்று. ஊரை விட்டு விலக்கப்பட்ட மறு தினமே தனது பதிமூன்று கோழிக்குஞ்சுகளையும் செங்கொண்டைக் கிளியையும் கூட்டிக்கொண்டு ஊரைத் தாண்டிய வெட்ட வெளியில் இருந்த மணல் முகட்டில் கூரையிட்டுத் தங்கினாள் செம்பா. அலையும் கூந்தலை விரித்தபடி படலின் முன்பாக நின்றுகொண்டிருப்பாள் காலையில். கடற்பறவைகள் மிதந்து கொண்டிருக்கும். ஓர் உதட்டில் பாதி பிய்ந்து போய் விடவே முகமே உருமாறிவிட்டது. மேலும் தானியேலின் மரணம் அவளது குணத்தினை அடியோடு மாற்றிவிட்டது. தன்னைத் தேடிவரும் ஆண்களை இடைவிடாமல் திட்டவும், அடிக்கவும் செய்தாள் செம்பா.

குணசுபாவம் மாறிய பெண்கள் எளிதில் கோபமுற்று விடுவார்கள் என்பது போல இச்சையின் அதீத கணத்தில் தன்னோடு சுகிக்கும் எவனையும் கடித்துவிடவோ, நகங்களால் உடலைக் கீறிவிடவோ அவள் தயங்குவதேயில்லை. நாளுக்கு நாள் அவள் வெளிறிக்கொண்டே வந்தாள். அவளைத் தேடி வரும் ஆண்கள் ஒவ்வொருவரும் உள்ளூர பயந்துகொண்டே வந்தனர். அவளது அணைப்பில் இதமான கணம் மாறிப்போய் வன்மமான பிடி போல இறுகியது. எந்த முரட்டு மனிதனும் அவளது கால்களின் கீழே மண்டியிட்டு முத்தமிடாமல் போவதே யில்லை. அவள் சொல்லை மீற முடியாதபடி ஓர் அதிகாரம்

அவளிடமிருந்தது. கொடுவாள் மீசை கொண்ட பழங்குற்ற வாளிகள் கூட அவளிடம் பேசவும் பயந்தனர்.

அவள் குடிப்பதற்கு நன்றாகக் கற்றுத் தேர்ந்துவிட்டாள். தன் சக குடிகாரன் எவனையும் விட அவள் நாக்கில் சுவைபடும் சாராயக் கலவை ருசி கண்டு மற்றவர்கள் பயந்தனர். அவளது முகத்தில் ஏன் என அறியாத இறுக்கம் அப்பிக்கொண்டது. தலை மயிரை எண்ணெய் வைக்காது திரிசடையாக்கினாள். செந்நிறத்தில் மாறிய தலையில் பிரி பிரியாகத் தலைமயிர்கள் சடை கொண்டிருந்தன. காவி ஏறிய பற்களும் மீன் வாடையும் அவளை விட்டு அகலவேயில்லை. குடிவெறி மிஞ்சிய நாள்களில் அவள் பாதிரியின் மகனை வெட்கம் கெட்ட நாயே என ஏசி, தனது உடலை அசைத்து வசையிடுவாள். என்றாலும் அவளால் பாடசாலையிருந்த தெருப்பக்கமே நடக்க முடியவில்லை.

ஊர் அவளை விலக்கியபோதும் அவள் ஊருக்குள் வருவதைத் தடுக்க எவருக்கும் இயலவில்லை. தன்னைத் தேடி வந்த ஆணின் உடுப்புகளை மாட்டிக்கொண்டு, காக்கிநிறப் பேண்ட்டும், வெள்ளைச் சட்டையும் போட்டபடி அவள் தெருவில் வருவதையோ, அல்லது பள்ளிக்கூடச் சிறுமியைப் போலப் பாவாடை தாவணியில் அலைவதையோ எவர் தடுக்க முடியும்.

வெயில் உச்சம் கொண்ட நாள் ஒன்றில் அவள் பாதிரியின் வீட்டை நோக்கி நடந்து போனாள். பாதிரி வீட்டு முகப்பில் நெல்லி மரம் இருந்தது. பாதிரி அதன் அடியில் அமர்ந்தபடி உடைந்த நாற்காலி ஒன்றைச் சரிசெய்துகொண்டிருந்தார். அவள் வந்ததைக் கவனிக்கவேயில்லை. அவள் சப்தமாகப் பாதிரியின் பெயரைச் சொல்லிக் கூப்பிட்டாள். நெடு நாள்களுக்குப் பிறகு தன்னைப் பெயர் சொல்லி அழைக்கும் பெண்ணை நிமிர்ந்து பார்த்த பாதிரி செம்பாவைக் கண்ட மாத்திரத்தில் அவரறியாது எழுந்து நின்றார்.

அவள், பாதிரியின் கண்களைப் பார்த்தபடியே சொன்னாள்.

''தானியேலின் மரணத்துக்குக் காரணம் நானில்லை.''

அவளிடம் என்ன பேச வேண்டும் என்பது கூட அறியாதவர் போல அவளையே பார்த்துக்கொண்டிருந்தார். அவள் மீது ஏன் கோபம் கொள்ள முடியவில்லை என அவருக்கே தெரிய வில்லை. பின்பு தணிந்த குரலில் கேட்டார்.

''உனக்கு என்ன வேண்டும்?''

அவள் தலையைக் கவிழ்ந்தபடி நின்றுவிட்டாள். இப்போது அவள் குரலில் இறுக்கமில்லை. ஒரு ரகசியத்தைப் போலச் சொன்னாள்.

''நான் கர்ப்பஸ்திரியாக இருக்கிறேன்.''

அவள் தன்னிடம் இதை ஏன் சொல்லுகிறாள் என்று புரியவில்லை. இருந்தும் கேட்டுக்கொண்டு தலையாட்டினார்.

''என் குழந்தைக்கு எந்த ஆணையும் நான் அப்பாவாகக் காட்ட முடியும்.''

அவர் திரும்பவும் கேட்டார்.

''உனக்கு என்ன வேண்டும்?''

அவள் இப்போது வன்மம் கொண்டவள் போலப் பேசினாள்.

''என்னை முதலில் அடைந்தவன் தானியேல்.''

அவர் இயந்திரத்தைப் போல மீண்டும் பேசினார்.

''உனக்கு என்ன வேண்டும்?''

அவள் அவர் கண்களைப் பார்த்தபடிச் சொன்னாள்.

''என் பிள்ளைக்கு தானியேல் அப்பனில்லை, தெரிந்து கொள்ளும். எனக்கு வேண்டியதெல்லாம் ஒரு மரச்சிலுவை. அதைச் செய்து தர முடியுமா?''

அவர் மறுக்கவில்லை. பதிலுக்கு எதிர்பாராதவள் போல அவள், ''செய்து வீட்டுக்குக் கொண்டு வந்து கொடும்'' என்றபடி விலகிப் போய்விட்டாள். அவள் போய்விட்ட பின்பு கூட அந்த இடத்தில் குரல் சுழன்றபடியே இருந்தது.

அன்றிரவு முழுவதும் பாதிரிக்கு உறக்கம் வரவேயில்லை. நள்ளிரவில் இறந்துபோன தனது மனைவியின் பழம் பெட்டியைத் திறந்து அதனுள் இருந்த பாசி மாலையில் கோக்கப்பட்ட மரச்சிலுவையைக் கையில் எடுத்துக்கொண்டு பெட்டியைப் பூட்டினார்.

தனது தாயாரின் சிலுவையைச் செம்பாவுக்காகக் கொண்டு போவதாகப் பாதிரி சொல்லியதும், இரண்டு மகளும் அவரைத் திட்டித் தீர்த்தனர். அவரோ சிரிப்பைத் தவிர வேறு பதில் பேச முடியாது தனது சைக்கிளை உருட்டிக்கொண்டு அவளைக் காணச் சென்றார்.

பெருமூச்சு விட்டபடி மீன் துண்டுகளைச் சுவைத்துக் கொண்டிருந்த செம்பா, பாதிரியைக் கண்டதும் நெடுநாள் களுக்குப் பிறகு சிரித்தாள். அவர் தலை தட்டாது குனிந்து வீட்டினுள் வந்தார். அவள் சாப்பிடுவதையே பார்த்துக்கொண்டு இருந்தார். அன்று சிலுவையை அவளிடம் தந்துவிட்டு வீடு திரும்பியபோது அவருக்கு மனம் சாந்தி கொண்டது.

சில மாதங்களுக்குப் பிறகு அவர் பிரசங்கம் முடித்துத் திரும்பும்போது அவள் வயிறு பெருத்தவளாகத் தனியே கடற்கரையில் அலைந்துகொண்டிருந்தாள். முதல் முறையாக அவர், அவள் பெயரைச் சொல்லி அழைத்தார். அவள் நடக்க முடியாமல் நடந்து வந்தாள். தான் வீட்டுக்கு வாங்கிய இனிப்புப் பண்டங்களை அவளிடம் தந்துவிட்டு அவள் கண்களைப் பார்த்தார். அது தாழ்ந்திருந்தது. அவளது முகத்தில், உடலில் வெண் திட்டுக்கள் விழத் தொடங்கி இருப்பதைக் கண்டார். ஒரு சிறுமியைப் போல அவரிடம் கேட்டாள்.

''சைக்கிளில் நான் ஏறிக்கொள்ளட்டுமா?''

வீடு வரை அவளை சைக்கிளில் கூட்டிப்போய் விட்டார். பாதிரியைக் கண்டதும் கிளி கத்தியது. அன்று மாலை வரை அவளோடு பேசியபடி செம்பாவின் வீட்டிலே இருந்தார். தன்னைத் தேடி வரும் எந்த ஆணையும் அவள் விரட்டி விடுகிறாள் என அறிந்திருந்தார். அவர் பேசிப் போன இரவில் எப்போதும் போலவே தனித்துக் குடித்துக்கொண்டிருந்த செம்பா விடியும்வரை கூப்பாடு போட்டு அழுதபோது, கிளி கொண்ட பயம் சொல்ல முடியாதது.

பாதிரி அவள் கூப்பிடாமலே செம்பாவின் வீட்டுக்கு வந்து போகத் தொடங்கினார். அவளோ பேசுவதைக் குறைத்துக் கொண்டே வந்தாள். இமைகள் பெருத்து வீங்கிய கண்களுடன் சதா தரையில் படுத்துக் கிடந்தாள். பாதிரி அவள் வீட்டுக்குப் போகக் கூடாது எனச் சபை தீர்மானித்தபோதும் அவர் வருவதை

நிறுத்திக்கொள்ளவில்லை. குடிவெறி மீறிய நாளில் செம்பா மீன் முள்ளை, கிளிக்கு ஊட்டிவிட, அது இரவெல்லாம் கத்தி ஓய்ந்தது. மறுநாள் பகலில் அவள் பார்த்தபோது படலின் வெளியே நூற்றுக்கணக்கான எறும்புகள் மொய்க்க இறந்து கிடந்தது.

கிளியின் சாவுக்குப் பிறகு அவள் நோய் பீடிக்கப்பட்டவள் போல ஆனாள். வெண் திட்டுக்கள் உடலெங்கும் பரவின. நீர்க் கொப்பளங்களும் தோன்றத் தொடங்கின. பாதிரி பஞ்சை வெந் நீரில் நனைத்து அவள் உடலின் கொப்புளங்களைத் துடைத்து வந்தார்.

வேதனை தாளாத நாள்களில் அவள் வீடும் கண்ணீர், பாதிரியின் கரங்களின் மீது துளிர்க்கும். அவளை மருத்துவமனைக்குக் கூட்டிப் போகலாம் என்றபோது வர மறுத்துவிட்டாள். பாதிரியை விசாரிப்பதற்காக இரண்டு வேதசபை ஊழியர்கள் வர இருந்த மறுநாளில், முந்தைய இரவில் அவர் தானே தனது உடைகளையும், சிலுவையையும் வேதக் கோயிலுக்கு ஒப்புக் கொடுத்துவிட்டு, சாதாரண மனிதனைப் போலக் கறுப்புக் கரை வேஷ்டியும் நீலநிறச் சட்டையுமாக சபையினின்று வெளியேறிப் போனபோது ஊரே அவரை ஏசியது.

செம்பாவுக்காகப் பாதிரியே உணவு தயாரித்தார். அவள் நடக்கவும் சிரமப்பட்டாள். மயிலிறகு விசிறியால் அவளுக்கு விசிறிவிட்டு இரவில் உறங்கச் செய்தார். தனது காரியங்கள் பற்றிய சிந்தனை இல்லாத மனிதனைப் போலவும், தனது கடமை என்பது போலவும் அந்த வீட்டில் இருந்து வந்தார் பாதிரி.

வேதனை தாளாத நாள் ஒன்றில் அவளை அழைத்துக்கொண்டு மலை நகரமொன்றின் மருத்துவமனைக்குப் புறப்பட்டார். சில மைல் நடந்து வந்ததும், பிரதானச் சாலையில் உப்பு வண்டிகள் போய்க்கொண்டிருந்தன. பாதிரி அவளை ஒரு வண்டியில் ஏற்றி உட்கார வைத்துவிட்டு, தானும் அமர்ந்துகொண்டார். நிலா பிறை கண்டிருந்தது. உப்பு வயலின் வாசனை எங்கும் நிரம்பியது. தன் மீது உறங்கும் அவளைப் பார்த்துக்கொண்டிருந்த போது தானியேலின் நினைவு தாளாது அவர் அழுதுவந்தார். நட்சத்திரங்கள் மட்டும் சலனமில்லாமல் வானில் மிதந்து கொண்டிருந்தன.